# நற்றமிழ் பழகு








அலை 1




| | |
|---|---|
| இவைகள் | இவை |
| இவைகளை | இவற்றை |
| மற்றவைகள் | மற்றவை |
| போன்றவைகள் | போன்றவை |
| உள்ளிட்டவைகள் | உள்ளிட்டவை |

பன்மைச் சொற்களுக்கு 'கள்' விகுதி கூடாது

# நற்றமிழ் பழகு






அலை 2





| | |
|---|---|
| மின்நூல் | மின்னூல் |
| பின்நாள் | பின்னாள் |
| பொன்நாள் | பொன்னாள் |
| தென்நாடு | தென்னாடு |
| பொன்நிறம் | பொன்னிறம் |

னகர ஒற்றுடன் நகர எழுத்து சேர்ந்தால் னகரமே இரட்டிக்கும். ன்+ந = ன்ன

# நற்றமிழ் பழகு






அலை 3





| | |
|---|---|
| குப்பைக்கூளம் | குப்பைகூளம் |
| ஏரிக்குளம் | ஏரிகுளம் |
| செடிக்கொடி | செடிகொடி |
| சட்டிப்பானை | சட்டிபானை |
| அரைக்குறை | அரைகுறை |

உம்மைத் தொகை கொண்ட சொற்களிடையே ஒற்று வராது

# நற்றமிழ் பழகு






அலை 4





| | |
|---|---|
| சுழற்ச்சி | சுழற்சி |
| பயிற்ச்சி | பயிற்சி |
| முயற்ச்சி | முயற்சி |
| ஏற்ப்படும் | ஏற்படும் |
| வரவேற்ப்பு | வரவேற்பு |

றகர ஒற்றுடன் வேறு ஒற்று எழுத்து உடன் வராது

# நற்றமிழ் பழகு




அலை 5





| | |
|---|---|
| இதற்க்கு | இதற்கு |
| இயற்க்கை | இயற்கை |
| அதற்க்கேற்ப | அதற்கேற்ப |
| தோற்க்கடித்து | தோற்கடித்து |
| மேற்க்கொண்டு | மேற்கொண்டு |



றகர ஒற்றுடன் வேறு ஒற்று எழுத்து உடன் வராது

# நற்றமிழ் பழகு




VaaniEditor.com

அலை 6





| | |
|---|---|
| தாய்ச்சேய் | தாய்சேய் |
| தாய்த்தந்தை | தாய்தந்தை |
| தாய்ப்பிள்ளை | தாய்பிள்ளை |
| தாய்பாசம் | தாய்ப்பாசம் |
| தாய்கிழவி | தாய்க்கிழவி |
| தாய்குலம் | தாய்க்குலம் |

தாயும் சேய்யும் (உம்மைத் தொகை) - ஒற்று வராது
தாயினது பாசம்(6வேற்றுமைத்தொகை) ஒற்றுவரு

# நற்றமிழ் பழகு






அலை 7





| | |
|---|---|
| முதற்நாள் | முதல்நாள் |
| உடற்நலம் | உடல்நலம் |
| தொழிற்நுட்பம் | தொழில்நுட்பம் |
| தொழிற்நகரம் | தொழில்நகரம் |
| தொழிற்முனைவோர் | தொழில்முனைவோர் |

வல்லினத்திற்கு முன்னர் மட்டுமே லகரம் றகரமாக
மாறும். இதர இடங்களில் மாறாது.

# நற்றமிழ் பழகு






அலை 8





| | |
|---|---|
| அங்கிகரித்தல் | அங்கீகரித்தல் |
| கபளிகரம் | கபளீகரம் |
| பரிட்சை | பரீட்சை |
| ஆசிர்வாதம் | ஆசீர்வாதம் |
| சதவிதம் | சதவீதம் |

ஈகாரம் இகரமாக, பிழை ஏற்படும் சொற்கள்

# நற்றமிழ் பழகு






அலை 9





| | |
|---|---|
| ருபாய் | ரூபாய் |
| கொடுரம் | கொடூரம் |
| சமுகநீதி | சமூகநீதி |
| திருவள்ளுர் | திருவள்ளூர் |
| நிருபித்துள்ளது | நிரூபித்துள்ளது |

ஊகாரம் உகரமாக, பிழை ஏற்படும் சொற்கள்

# நற்றமிழ் பழகு



VaaniEditor.com



அலை 10





| | |
| --- | --- |
| தலைப்பு செய்தி | தலைப்புச் செய்தி |
| முக்கிய செய்தி | முக்கியச் செய்தி |
| புதியச் செய்தி | புதிய செய்தி |
| நாளையச் செய்தி | நாளைய செய்தி |
| இன்றையச் செய்தி | இன்றைய செய்தி |
| தற்போதையச் செய்தி | தற்போதைய செய்தி |

பெயரடைக்குப் பின் ஒற்று மிகாது.

# நற்றமிழ் பழகு




VaaniEditor.com



அலை 11





| | |
|---|---|
| ஓர் முக்கிய | ஒரு முக்கிய |
| ஒரு இடத்தை | ஓர் இடத்தை |
| பதினோர் வகை | பதினொரு வகை |
| பதினொரு அறை | பதினோர் அறை |
| இருபத்தோரு வயது | இருபத்தொரு வயது |
| இருபத்தோரு அமைப்பு | இருபத்தோர் அமைப்பு |

உயிரெழுத்துச் சொல்லுக்கு முன் 'ஓர்' வரும்
இதர எழுத்துச் சொல்லுக்கு முன் 'ஒரு' வரும்

# நற்றமிழ் பழகு






அலை 12





| | |
|---|---|
| மகளீர் | மகளிர் |
| நாத்தீகன் | நாத்திகன் |
| சதவீகிதம் | சதவிகிதம் |
| பரீசிலனை | பரிசீலனை |
| செலவீனங்கள் | செலவினங்கள் |
| தீடீர்த் திருப்பங்கள் | திடீர்த் திருப்பங்கள் |

இகரம் ஈகாரமாகப் பிழை வரும் இடங்கள்

# நற்றமிழ் பழகு




VaaniEditor.com



அலை 13





| | |
|---|---|
| சமூதாயம் | சமுதாயம் |
| ஆளூநர் | ஆளுநர் |
| அர்ஜூனர் | அர்ஜுனர் |
| சுமூகமான | சுமுகமான |
| திருவள்ளூவர் | திருவள்ளுவர் |
| பேரூந்து நிலையம் | பேருந்து நிலையம் |

உகரம் ஊகாரமாகப் பிழை வரும் இடங்கள்

# நற்றமிழ் பழகு






அலை 14





| | |
|---|---|
| பகிர்ந்துக்கொடு | பகிர்ந்துகொடு |
| வந்துக்கொண்டு | வந்துகொண்டு |
| கலந்துக்கொண்டு | கலந்துகொண்டு |
| தெரிந்துக்கொள்ள | தெரிந்துகொள்ள |
| அறிந்துக்கொண்ட | அறிந்துகொண்ட |
| புரிந்துக்கொள்ளும் | புரிந்துகொள்ளும் |

"ந்து" என முடியும் வினையெச்சத்தில் ஒற்று வராது.

# நற்றமிழ் பழகு




VaaniEditor.com



அலை 15





| | |
|---|---|
| கண்டுப்பிடித்து | கண்டுபிடித்து |
| கொண்டுச்சென்று | கொண்டுசென்று |
| ஒன்றுக்கூடல் | ஒன்றுகூடல் |
| நின்றுக்கொண்டு | நின்றுகொண்டு |
| சன்றுக்கொண்டிருந்த | சென்றுகொண்டிருந்த |

"ன்று", "ண்டு" என முடியும் வினையெச்சத்தில் ஒற்று வராது.

# நற்றமிழ் பழகு






அலை 16




| | |
|---|---|
| செய்துக்கொண்டு | செய்துகொண்டு |
| செய்துக்கொள்ள | செய்துகொள்ள |
| அழுதுக்கொண்டு | அழுதுகொண்டு |
| நெய்துக்கொண்டு | நெய்துகொண்டு |
| பெய்துக்கொண்டு | பெய்துகொண்டு |

"ய்து" என முடியும் வினையெச்சத்தில் (இடைத்தொடர்க் குற்றியலுகரம்) ஒற்று வராது.

# நற்றமிழ் பழகு






அலை 17





| | |
|---|---|
| அபாராதம் | அபராதம் |
| சாயாந்திரம் | சாயந்திரம் |
| பாயாசம் | பாயசம் |
| விவகாரத்து | விவாகரத்து |
| புராதான | புராதன |

தேவையற்ற துணைக்காலால்
பிழை வரும் இடங்கள்

# நற்றமிழ் பழகு




அலை 18




| | |
|---|---|
| மாதந்திர | மாதாந்திர |
| வருடந்திர | வருடாந்திர |
| கோலகலமாக | கோலாகலமாக |
| பொருளாதர | பொருளாதார |
| சாதரண | சாதாரண |
| செலவாணி | செலாவணி |

துணைக்காலின்றிப்
பிழை வரும் இடங்கள்

# நற்றமிழ் பழகு






அலை 19





| | |
|---|---|
| மதிப்பிற்குறிய | மதிப்பிற்குரிய |
| அதற்குறிய | அதற்குரிய |
| அன்பிற்குறிய | அன்பிற்குரிய |
| என்பதற்குறிய | என்பதற்குரிய |
| கவலைக்குறிய | கவலைக்குரிய |

முக்கியமான ற-ர பிழை

[...]+கு + உரிய =[....]குரிய

# நற்றமிழ் பழகு






அலை 20





| | |
|---|---|
| வெற்றிபெரும் | வெற்றிபெறும் |
| நடைபெரும் | நடைபெறும் |
| இடம்பெரும் | இடம்பெறும் |
| பயன்பெரும் | பயன்பெறும் |
| பங்குபெரும் | பங்குபெறும் |
| பயிற்சிபெரும் | பயிற்சிபெறும் |

பெரும் = பெரிய
பெறும் = அடைதல்/கிடைத்தல்

# நற்றமிழ் பழகு



VaaniEditor.com

அலை 21





| | |
|---|---|
| பழம்பெறும் | பழம்பெரும் |
| மாபெறும் | மாபெரும் |
| பெறும்பான்மை | பெரும்பான்மை |
| பெறும்பாலான | பெரும்பாலான |
| இருபெறும் | இருபெரும் |
| முதுபெறும் | முதுபெரும் |

பெரும் = பெரிய
பெறும் = அடைதல்/கிடைத்தல்

# நற்றமிழ் பழகு




VaaniEditor.com



அலை 22




| | |
|---|---|
| எதிர்ப்பார்ப்பு | எதிர்பார்ப்பு |
| எதிர்க்கொள்வது | எதிர்கொள்வது |
| எதிர்கட்சி | எதிர்க்கட்சி |
| எதிர்கேள்வி | எதிர்க்கேள்வி |
| எதிர்தரப்பு | எதிர்த்தரப்பு |
| எதிர்கருத்து | எதிர்க்கருத்து |

'எதிரேவரும்/சந்திக்கவுள்ள' ➔ ஒற்றுவராது

'எதிரான/மாற்று' ➔ ஒற்றுவரும்

# நற்றமிழ் பழகு






அலை 23





| | |
|---|---|
| அதுப்பற்றி | அதுபற்றி |
| அதுப்போல | அதுபோல |
| இதுப்போன்ற | இதுபோன்ற |
| இவைத்தான் | இவைதான் |
| அவைக்குறித்து | அவைகுறித்து |

அது,இது,அவை,இவை போன்ற சுட்டுச் சொற்களில் ஒற்று வராது

# நற்றமிழ் பழகு




அலை 24




| | |
|---|---|
| செய்யும்மாறு | செய்யுமாறு |
| மட்டும்மல்ல | மட்டுமல்ல |
| அம்மாவாசை - | அமாவாசை |
| கொள்ளும்மாறு | கொள்ளுமாறு |
| பிரம்மை | பிரமை |
| பிரம்மிப்பாக | பிரமிப்பாக |

பிழையாக மரகம் இரட்டிக்கும்
முக்கிய இடங்கள்

# நற்றமிழ் பழகு




VaaniEditor.com



அலை 25





| | |
|---|---|
| பாவானர் | பாவாணர் |
| அமுதவானன் | அமுதவாணன் |
| கலைவானர் | கலைவாணர் |
| அம்பலவானர் | அம்பலவாணர் |
| வானவேடிக்கை | வாணவேடிக்கை |
| புஸ்வானம் | புஸ்வாணம் |

வாணன்/வாணர் =வசிப்பவர்
வாணம் = வெடிபொருள்

# நற்றமிழ் பழகு






அலை 26





| | |
|---|---|
| ஏவுகனை | ஏவுகணை |
| எறிகனை | எறிகணை |
| கேள்விக்கனை | கேள்விக்கணை |
| கனையாழி | கணையாழி |
| வீராங்கணை | வீராங்கனை |

கணை=திரட்சி/அம்பு

# நற்றமிழ் பழகு



VaaniEditor.com



அலை 27





| | |
|---|---|
| மற்றப்படி | மற்றபடி |
| பழையப்படி | பழையபடி |
| அடுத்தக்கட்ட | அடுத்தகட்ட |
| நல்லப்படியாக | நல்ல படியாக |
| பெரியக் கோவில் | பெரிய கோவில் |
| புதியக் கட்சி | புதிய கட்சி |

இதுபோன்ற குறிப்புப் பெயரெச்சங்களில் ஒற்று வராது

# நற்றமிழ் பழகு






அலை 28





| | |
|---|---|
| ஒருப்பக்கம் | ஒருபக்கம் |
| இருச்சக்கர | இருசக்கர |
| மூன்றுப் பொருட்கள் | மூன்று பொருட்கள் |
| பத்து பைசா | பத்துப் பைசா |
| எட்டு திசை | எட்டுத் திசை |

எட்டும் பத்தும் தவிர வேறு
ஓரிலக்க எண்களில் ஒற்று வராது

# நற்றமிழ் பழகு




அலை 29





| | |
|---|---|
| பாதிபேர் | பாதிப்பேர் |
| முழுகவனம் | முழுக்கவனம் |
| அரைகம்பம் | அரைக்கம்பம் |
| மீதிதொகை | மீதித்தொகை |
| துண்டுசீட்டு | துண்டுச்சீட்டு |

இத்தகைய எண்ணுப் பெயர்களில் ஒற்று வரும்

# நற்றமிழ் பழகு






அலை 30





| | |
|---|---|
| நினைவுகூறும் | நினைவுகூரும் |
| பொறுந்தும் | பொருந்தும் |
| பெறுமை | பெருமை |
| அறிவுறை | அறிவுரை |
| உளமாற | உளமார |

அதிகமாக "ர-ற" பிழை வரும் இடங்கள்

# நற்றமிழ் பழகு




அலை 31




| | |
|---|---|
| பெருவது | பெறுவது |
| சில்லரை | சில்லறை |
| நிருவனம் | நிறுவனம் |
| அருகம்புல் | அறுகம்புல் |
| பொருப்பில் | பொறுப்பில் |
| பொருத்தவரையில் | பொறுத்தவரையில் |

அதிகமாக "ற-ர" பிழை வரும் இடங்கள்

# நற்றமிழ் பழகு




அலை 32





| | |
|---|---|
| குறைப்பாடு | குறைபாடு |
| குறைப்பட்டு | குறைபட்டு |
| குறைத்தீர்க்கும் | குறைதீர்க்கும் |
| குறைக்கேட்பு | குறைகேட்பு |
| குறைபிரசவம் | குறைப்பிரசவம் |
| குறைபிறப்பு | குறைப்பிறப்பு |

2 வேற்றுமைத்தொகை

குறையை எனும் போதும் ஒற்று வராது.
குறைவான என்ற பொருளில் ஒற்று வரும்.

# நற்றமிழ் பழகு






அலை 33





| | |
|---|---|
| திரைபடம் | திரைப்படம் |
| திரைகதை | திரைக்கதை |
| திரைகலைஞர் | திரைக்கலைஞர் |
| திரைதுறை | திரைத்துறை |
| திரைக்கடல் | திரைகடல் |

திரைச்சீலை என்ற பொருளில் ஒற்று வரும்.
அலை என்ற பொருளில் ஒற்று வராது

# நற்றமிழ் பழகு






அலை 34





| | |
|---|---|
| சிறைசாலை | சிறைச்சாலை |
| சிறைதுறை | சிறைத்துறை |
| சிறைதண்டனை | சிறைத்தண்டனை |
| சிறைபட்ட | சிறைப்பட்ட |
| சிறைப்பிடித்தல் | சிறைபிடித்தல் |

சிறையால் பட்ட = சிறைப்பட்ட
சிறைக்குப் பிடித்த = சிறைபிடித்த

# நற்றமிழ் பழகு






அலை 35





| | |
|---|---|
| கடைபிடிக்க | கடைப்பிடிக்க |
| கடைகுட்டி | கடைக்குட்டி |
| கடைகாரரர் | கடைக்காரரர் |
| கடைதெருவில் | கடைத்தெருவில் |
| கடைப்போடு | கடைபோடு |

கடை(சி)வரை பிடி = கடைப்பிடி
கடையை உடைய தெரு = கடைத்தெரு
கடையைப் போடு = கடைபோடு

# நற்றமிழ் பழகு






அலை 36





| | |
|---|---|
| இடைதேர்தல் | இடைத்தேர்தல் |
| இடைகால | இடைக்கால |
| இடைதரகர் | இடைத்தரகர் |
| இடைசெருகல் | இடைச்செருகல் |
| இடைபட்ட | இடைப்பட்ட |

இரண்டிற்கு இடையில் உள்ள
என்ற பொருளில் ஒற்று வரும்.

# நற்றமிழ் பழகு






அலை 37





| | |
|---|---|
| கீழ்கண்ட | கீழ்க்கண்ட |
| கீழ்படிந்து | கீழ்ப்படிந்து |
| கீழ்தரமான | கீழ்த்தரமான |
| கீழ்தளத்தில் | கீழ்த்தளத்தில் |
| கீழ்பகுதி | கீழ்ப்பகுதி |

கீழேயுள்ள/கீழ்மையான
பொருளில் ஒற்று மிகும்

# நற்றமிழ் பழகு




அலை 38





| | |
|---|---|
| பரீச்சை | பரீட்சை |
| கூட்டாச்சி | கூட்டாட்சி |
| திராச்சை | திராட்சை |
| நல்லாச்சி | நல்லாட்சி |
| வட்டாச்சியர் | வட்டாட்சியர் |
| கோட்டாச்சியர் | கோட்டாட்சியர் |

சகரம் டகரமாகப் பிழைவரும் இடங்கள்

# நற்றமிழ் பழகு




அலை 39




| | |
|---|---|
| சிகிட்சை | சிகிச்சை |
| சுயேட்சை | சுயேச்சை |
| பேரீட்சை | பேரீச்சை |
| இலட்சினை | இலச்சினை |
| பொள்ளாட்சி | பொள்ளாச்சி |
| எதேட்சையாக | எதேச்சையாக |

டகரம் சகரமாகப் பிழைவரும் இடங்கள்

# நற்றமிழ் பழகு




அலை 40





| | |
|---|---|
| நடைப்பெறும் | நடைபெறும் |
| புகழ்ப்பெற்ற | புகழ்பெற்ற |
| வெற்றிப்பெற | வெற்றிபெற |
| ஒய்வுப்பெற்று | ஒய்வுபெற்று |
| வலுபெற்று | வலுப்பெற்று |
| உருபெற்ற | உருப்பெற்ற |

பெயர்ச்சொல்லுக்குப் பின் "பெறுதல்" என்ற சொல் வந்தால் ஒற்று மிகாது

முற்றுகரச் சொற்கள் விதி விலக்கு

# நற்றமிழ் பழகு






அலை 41





| | |
|---|---|
| குறைந்தப்பட்சம் | குறைந்தபட்சம் |
| அறிவித்தப்படி | அறிவித்தபடி |
| ரசித்தப்படி | ரசித்தபடி |
| பார்த்தப்பின் | பார்த்தபின் |
| திட்டமிட்டப்படி | திட்டமிட்டபடி |
| இருந்தப்போது | இருந்தபோது |

பெயரெச்சச் சொற்களுக்குப் பின் ஒற்று மிகாது.

# நற்றமிழ் பழகு






அலை 42





| | |
|---|---|
| வம்சாவழி | வம்சாவளி |
| தீபாவலி | தீபாவளி |
| சூறாவழி | சூறாவளி |
| நாமாவழி | நாமாவளி |

ஆவளி என்றால் ஒழுங்கு/வரிசை

# நற்றமிழ் பழகு








அலை 43




| | |
|---|---|
| விசாரனை | விசாரணை |
| வரதட்சனை | வரதட்சணை |
| ஏவுகனை | ஏவுகணை |
| முன்னனி | முன்னணி |
| பின்னனியில் | பின்னணியில் |
| அனுகப்பட | அணுகப்பட |

னகர- ணகர பிழை விடும் இடங்கள்

# நற்றமிழ் பழகு






அலை 44





| | |
|---|---|
| பயனம் | பயணம் |
| திருமனம் | திருமணம் |
| கனிசமான | கணிசமான |
| பரிமான | பரிமாண |
| என்னம் | எண்ணம் |
| நுன்னறிவு | நுண்ணறிவு |

னகர- ணகர பிழை விடும் இடங்கள்

# நற்றமிழ் பழகு




அலை 45




| | |
|---|---|
| தனிபட்ட | தனிப்பட்ட |
| தனிதனியாக | தனித்தனியாக |
| தனிகவனம் | தனிக்கவனம் |
| தனிபெரும் | தனிப்பெரும் |
| தனிபெரும்பான்மை | தனிப்பெரும்பான்மை |
| தனிபிரிவு | தனிப்பிரிவு |

தனி என்ற உரிச்சொல்லுக்குப் பின் ஒற்று மிகும்

# நற்றமிழ் பழகு




அலை 46





| | |
|---|---|
| பொதுதுறை | பொதுத்துறை |
| பொதுகுழு | பொதுக்குழு |
| பொதுசெயலாளர் | பொதுச்செயலாளர் |
| பொதுதேர்வு | பொதுத்தேர்வு |
| பொதுகூட்டம் | பொதுக்கூட்டம் |
| பொதுபுத்தி | பொதுப்புத்தி |

பொது என்ற உரிச்சொல்லுக்குப் பின் ஒற்று மிகும்

# நற்றமிழ் பழகு




அலை 47





| | |
|---|---|
| நடுகடலில் | நடுக்கடலில் |
| நடுதெருவில் | நடுத்தெருவில் |
| நடுபகுதி | நடுப்பகுதி |
| நடுதரம் | நடுத்தரம் |
| நடுக்கற்கள் | நடுகற்கள் |

நடு என்ற உரிச்சொல்லுக்கு மிகும்
நடு என்ற வினைச்சொல்லுக்கு மிகாது

# நற்றமிழ் பழகு






அலை 48





| | |
|---|---|
| ஆண்டுதோரும் | ஆண்டுதோறும் |
| வருடந்தோரும் | வருடந்தோறும் |
| மாதந்தோரும் | மாதந்தோறும் |
| வாரந்தோரும் | வாரந்தோறும் |
| தினந்தோரும் | தினந்தோறும் |
| நாள்தோரும் | நாள்தோறும் |

ஒவ்வொரு எனப் பொருள்தரும்
இடைச்சொல் - தோறும்

# நற்றமிழ் பழகு




அலை 49





| | |
|---|---|
| ஆழியார் | ஆழியாறு |
| மூணார் | மூணாறு |
| அடையார் | அடையாறு |
| திருநள்ளார் | திருநள்ளாறு |
| முல்லைப்பெரியார் | முல்லைப்பெரியாறு |

ஆற்றுப் பெயரில் உள்ள ஊர்கள் ஆர் விகுதியில் முடியாது

# நற்றமிழ் பழகு






அலை 50





| | |
|---|---|
| சர்ச்சைக்குறிய | சர்ச்சைக்குரிய |
| மதிப்பிற்குறிய | மதிப்பிற்குரிய |
| பாராட்டுக்குறியது | பாராட்டுக்குரியது |
| கவலைக்குறிய | கவலைக்குரிய |
| கேள்விக்குரியா | கேள்விக்குறியா |

கு+உரிய ➪ குரிய

# நற்றமிழ் பழகு




அலை 51





| | |
|---|---|
| வெடிப்பொருள் | வெடிபொருள் |
| நுகர்ப்பொருள் | நுகர்பொருள் |
| அடிக்குழாய் | அடிகுழாய் |
| புதைக்குழி | புதைகுழி |
| வரைப்பட | வரைபடம் |
| வளர்ச்சிதை | வளர்சிதை |

வினையடி (வெடி, நுகர், அடி) ஒட்டி வந்தால் வினைத்தொகை. ஒற்றுமிகாது

# நற்றமிழ் பழகு




அலை 52





| | |
|---|---|
| சனிகிழமை | சனிக்கிழமை |
| வாக்குசாவடி | வாக்குச்சாவடி |
| வருவாய்துறை | வருவாய்த்துறை |
| இறுதிகட்டம் | இறுதிக்கட்டம் |
| பரிசுபொருள் | பரிசுப்பொருள் |
| கருப்புதுணி | கருப்புத்துணி |

பொதுப் பெயருக்கு (கிழமை, துறை, சாவடி, பொருள்) முன் சிறப்புப் பெயர் வந்தால் இருபெயரொட்டுப் பண்புத் தொகை. ஒற்று மிகும்.

# நற்றமிழ் பழகு




அலை 53




| | |
|---|---|
| நார்சத்து | நார்ச்சத்து |
| நகர்புறம் | நகர்ப்புறம் |
| வாழைபழம் | வாழைப்பழம் |
| கோடைகாலம் | கோடைக்காலம் |
| பங்குசந்தை | பங்குச்சந்தை |
| அணுகுண்டு | அணுக்குண்டு |

பொதுப் பெயருக்கு (சத்து, பழம், காலம், சந்தை) முன் சிறப்புப் பெயர் வந்தால் இருபெயரொட்டுப் பண்புத் தொகை. ஒற்று மிகும்.

# நற்றமிழ் பழகு






அலை 54





| | |
|---|---|
| அவதூரை | அவதூற்றை |
| திருநீர் | திருநீறு |
| வயிருக்கு | வயிற்றுக்கு |
| இடையூருக்கு | இடையூற்றுக்கு |
| பச்சை பயர் | பச்சைப்பயறு |

'று'வை 'ர' ஆகப் பிழைவிடும் இடங்கள்

# நற்றமிழ் பழகு






அலை 55





| | |
|---|---|
| வேரென்ன | வேறென்ன |
| உடற்கூராய்வு | உடற்கூறாய்வு |
| தவராமல் | தவறாமல் |
| கூட்டுரவு | கூட்டுறவு |
| வரட்சி/வரண்டு | வறட்சி/வறண்டு |

றகரம் ரகரமாகப் பிழைவிடும் இடங்கள்

# நற்றமிழ் பழகு




அலை 56




| | |
|---|---|
| கிராமப்புரம் | கிராமப்புறம் |
| மறுபுரம் | மறுபுறம் |
| பின்புரம் | பின்புறம் |
| இருபுரம் | இருபுறம் |
| விழுப்புறம் | விழுப்புரம் |
| மணப்புறம் | மணப்புரம் |

புரம் = நகரம்
புறம் = வெளி/பகுதி

# நற்றமிழ் பழகு






அலை 57





| | |
|---|---|
| புதுபுது | புதுப்புது |
| புதுகோட்டை | புதுக்கோட்டை |
| புதுசேரி | புதுச்சேரி |
| புதுகவிதை | புதுக்கவிதை |
| புதுசிந்தனை | புதுச்சிந்தனை |

புது என்ற முற்றுகர உரிச்சொல்லுக்குப் பின் ஒற்று மிகும்

# நற்றமிழ் பழகு




VaaniEditor.com





அலை 58




| | |
|---|---|
| திருகோயில் | திருக்கோயில் |
| திருபாதம் | திருப்பாதம் |
| திருகல்யாணம் | திருக்கல்யாணம் |
| திருகார்த்திகை | திருக்கார்த்திகை |
| திருசபை | திருச்சபை |
| திருதேர் | திருத்தேர் |

திரு என்ற முற்றுகர உரிச்சொல்லுக்குப் பின் ஒற்று மிகும்

# நற்றமிழ் பழகு




அலை 59





| | |
|---|---|
| வலுபெற | வலுப்பெற |
| வலுபடுத்த | வலுப்படுத்த |
| வலுகுறைவாக | வலுக்குறைவாக |
| வலுசேர்க்கும் | வலுச்சேர்க்கும் |
| வலுகட்டாயமாக | வலுக்கட்டாயமாக |

வலு என்ற முற்றுகர உரிச்சொல்லுக்குப் பின் ஒற்று மிகும்

# நற்றமிழ் பழகு






அலை 60





| | |
|---|---|
| புதுபிக்கப்பட்ட | புதுப்பிக்கப்பட்ட |
| விண்ணபிக்கும் | விண்ணப்பிக்கும் |
| மெய்பிக்கும் | மெய்ப்பிக்கும் |
| உயிர்பிக்க | உயிர்ப்பிக்க |
| பிறபிக்கப்பட்டது | பிறப்பிக்கப்பட்டது |

பெரும்பாலும் பிறவினைச் சொற்களில்
ஒற்றுடனே ‘பி’ விகுதி சேரும்

# நற்றமிழ் பழகு






அலை 61





| | |
|---|---|
| மருத்துவமணை | மருத்துவமனை |
| அரண்மணை | அரண்மனை |
| பணிமணை | பணிமனை |
| புதுமணை | புதுமனை |
| அரிவாள்மனை | அரிவாள்மணை |
| பிரிமனை | பிரிமணை |

மனை= இடம்/வீடு

மணை=பலகை

# நற்றமிழ் பழகு






அலை 62





| | |
|---|---|
| நண்ணீர் | நன்னீர் |
| புண்ணகை | புன்னகை |
| மண்ணிப்பு | மன்னிப்பு |
| அண்ணதானம் | அன்னதானம் |
| அண்ணாச்சிப்பழம் | அன்னாசிப்பழம் |

அதிகமாக இரட்டை ணகரப் பிழை வரும் இடங்கள்

# நற்றமிழ் பழகு




அலை 63





| | |
|---|---|
| படிபடியாக | படிப்படியாக |
| தனிதனியே | தனித்தனியே |
| பொடிபொடியாக | பொடிப்பொடியாக |
| சின்னசின்னதாக | சின்னச்சின்னதாக |
| துண்டுதுண்டாய் | துண்டுத்துண்டாய் |
| துளிதுளியாக | துளித்துளியாக |

அடுக்குத்தொடரில் ஒற்று மிகும்.

# நற்றமிழ் பழகு




அலை 64





| | |
|---|---|
| படப்படக்க | படபடக்க |
| துடித்துடித்த | துடிதுடித்த |
| பதைப்பதைக்கும் | பதைபதைக்கும் |
| பளப்பளப்பாக | பளபளப்பாக |
| குறுக்குறுப்பு | குறுகுறுப்பு |

இரட்டைக் கிளவிகளில் ஒற்று மிகாது

# நற்றமிழ் பழகு




அலை 65





| | |
|---|---|
| தாரளமாக | தாராளமாக |
| போரட்டம் | போராட்டம் |
| கள்ளச்சாரயம் | கள்ளச்சாராயம் |
| பாராம்பரிய | பாரம்பரிய |
| சராமாரியாக | சரமாரியாக |
| பாராபட்சம் | பாரபட்சம் |

ரகரத்திற்கும் ராகாரத்திற்கும் குழப்பம் ஏற்படும் இடங்கள்

# நற்றமிழ் பழகு






அலை 66





கன்னியாகுமாரி கன்னியாகுமரி
சனாதான சனாதன
ஏராளாமான ஏராளமான
நிர்வாகித்து நிர்வகித்து
செயலாளார் செயலாளர்

தேவையற்ற துணைக்காலால் பிழை ஏற்படும் இடங்கள்

# நற்றமிழ் பழகு




அலை 67





| | |
|---|---|
| அத்தியவசிய | அத்தியாவசிய |
| பெரும்பலான | பெரும்பாலான |
| தயராக | தயாராக |
| வித்தியசமான | வித்தியாசமான |
| காலவதி | காலாவதி |
| சாதரணை | சாதாரணை |

துணைக்காலின்றிப் பிழை
ஏற்படும் இடங்கள்

# நற்றமிழ் பழகு






அலை 68





| | |
|---|---|
| பற்றாகுறை | பற்றாக்குறை |
| அடங்காபிடாரி | அடங்காப்பிடாரி |
| போதாகுறைக்கு | போதாக்குறைக்கு |
| விடாபிடியாக | விடாப்பிடியாக |
| நம்பிக்கையில்லா-தீர்மானம் | நம்பிக்கையில்லாத்-தீர்மானம் |

கடைசி எழுத்தில்லாமல் எதிர்மறையாக வரும் பெயரெச்சத்தில் ஒற்று மிகும்.

(ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்)

# நற்றமிழ் பழகு






அலை 69





| | |
|---|---|
| முடியாதப்படி | முடியாதபடி |
| இல்லாதத் தன்மை | இல்லாத தன்மை |
| செய்யாதக் குற்றம் | செய்யாத குற்றம் |
| சொல்லாதக் காதல் | சொல்லாத காதல் |
| பார்க்காதப் போது | பார்க்காத போது |

எதிர்மறையான பொருளில் வரும் பெயரெச்சச் சொற்களில் ஒற்று மிகாது

# நற்றமிழ் பழகு




அலை 70




| | |
|---|---|
| கேட்டுகொள்ள | கேட்டுக்கொள்ள |
| சுட்டுகொலை | சுட்டுக்கொலை |
| போட்டுகாட்டி | போட்டுக்காட்டி |
| பெற்றுகொண்டு | பெற்றுக்கொண்டு |
| ஏற்றுகொள்ள | ஏற்றுக்கொள்ள |
| கற்றுகொண்ட | கற்றுக்கொண்டு |

ட்டு, ற்று என்று முடியும் வினையெச்சச் சொற்களில் ஒற்று மிகும்.

(வன்றொடர்க் குற்றியலுகர வினையெச்சம்)

# நற்றமிழ் பழகு






அலை 71





| | |
|---|---|
| சேர்த்துதான் | சேர்த்துத்தான் |
| கொடுத்துதான் | கொடுத்துத்தான் |
| எடுத்துகாட்டாக | எடுத்துக்காட்டாக |
| வைத்துகொண்டு | வைத்துக்கொண்டு |
| பார்த்துகொண்டு | பார்த்துக்கொண்டு |
| தரிவித்துகொள்கிறேன் | தெரிவித்துக்கொள்கிறே |

த்து என்று முடியும் வினையெச்சச் சொற்களில் ஒற்று மிகும்.

(வன்றொடர்க் குற்றியலுகர வினையெச்சம்)

# நற்றமிழ் பழகு






அலை 72





| | |
|---|---|
| குறிப்பிடதக்கது | குறிப்பிடத்தக்கது |
| கவனிக்கதக்கது | கவனிக்கத்தக்கது |
| கண்டிக்கதக்கது | கண்டிக்கத்தக்கது |
| வரவேற்கதக்கது | வரவேற்கத்தக்கது |
| மதிக்கதக்க | மதிக்கத்தக்க |

வினையெச்சச் சொல்லுக்கு அடுத்து தக்கது எனும் சொல் சேரும் போது ஒற்றுமிகும்

# நற்றமிழ் பழகு




அலை 73





| | |
|---|---|
| மேற்கோல்கள் | மேற்கோள்கள் |
| வேண்டுகோல் | வேண்டுகோள் |
| குறிக்கோல் | குறிக்கோள் |
| கொடுங்கோள் | கொடுங்கோல் |
| ஊன்றுகோள் | ஊன்றுகோல் |
| அளவுகோள் | அளவுகோல் |

கோல்=கம்பு

கோள்=கொள்கை/தன்மை

# நற்றமிழ் பழகு




அலை 74




| | |
|---|---|
| தடைச் செய்ய | தடை செய்ய |
| சரிச்செய்ய | சரிசெய்ய |
| பதிவுச்செய் | பதிவுசெய் |
| ஆய்வுச்செய்து | ஆய்வுசெய்து |
| உணரசெய் | உணரச்செய் |
| தொடரசெய் | தொடரச்செய் |

செய்

பெயர்ச் சொல்லுக்கு அடுத்து மிகாது

வினையெச்சச் சொல்லுக்கு அடுத்து மிகும்

# நற்றமிழ் பழகு






அலை 75





| ✗ | ✓ |
|---|---|
| துணைப்போகும் | துணைபோகும் |
| துணைப்புரியும் | துணைபுரியும் |
| துணைக்கொண்டு | துணைகொண்டு |
| துணைதலைவர் | துணைத்தலைவர் |
| துணைகண்டம் | துணைக்கண்டம் |
| துணை செயலாளர் | துணைச் செயலாளர் |

'துணை'
அடுத்தது பெயர்ச்சொல்லென்றால் வலிமிகும்,
வினைச் சொல்லென்றால் வலி மிகாது

# நற்றமிழ் பழகு




அலை 76





| | |
|---|---|
| மனதாற | மனதார |
| கண்ணாற | கண்ணார |
| நெஞ்சாற | நெஞ்சார |
| வாயாற | வாயார |
| பசியார | பசியாற |
| காலார | காலாற |

ஆற - ஆறுதல்
ஆர - நிறைய

# நற்றமிழ் பழகு






அலை 77





| | |
|---|---|
| இருபத்தியாறு | இருபத்தாறு |
| நாற்பத்தியெட்டு | நாற்பத்தெட்டு |
| இருபத்தியைந்து | இருபத்தைந்து |
| இருபத்தியோராம் | இருபத்தோராம் |
| முப்பத்தியொன்பது | முப்பத்தொன்பது |
| ஐம்பத்தியிரண்டு | ஐம்பத்திரண்டு |

உகரத்தில் முடியும் எண்களில்
யகர உடம்படுமெய் தோன்றாது

# நற்றமிழ் பழகு






அலை 78





| | |
|---|---|
| முயற்சிப்பது | முயல்வது |
| முயற்சித்தால் | முயன்றால் |
| முயற்சிக்கிறோம் | முயல்கிறோம் |
| முயற்சிக்கிறார் | முயல்கிறார் |
| முயற்சித்துள்ளனர் | முயன்றுள்ளனர் |

முயல்தல் என்றிருக்கும் போது
முயற்சித்தல் என்ற சொல் தேவையில்லை.

# நற்றமிழ் பழகு



VaaniEditor.com



அலை 79





| | |
|---|---|
| கட்டுபாடுடன் | கட்டுப்பாட்டுடன் |
| தமிழ்நாடில் | தமிழ்நாட்டில் |
| குறைபாடால் | குறைபாட்டால் |
| முதலீடுக்கு | முதலீட்டுக்கு |
| மாநாடை | மாநாட்டை |
| ஈரோடில் | ஈரோட்டில் |

இருகுறில் அல்லது நெடிலுடன் ‘டு’ வில் முடியும் சொற்களில் நடுவில் மெய் இரட்டித்து விகுதி சேரும்

# நற்றமிழ் பழகு




அலை 80




| | |
|---|---|
| சாறை | சாற்றை |
| கயிறை | கயிற்றை |
| மூணாறில் | மூணாற்றில் |
| கிணறில் | கிணற்றில் |
| திருநள்ளாறில் | திருநள்ளாற்றில் |
| வரலாறையும் | வரலாற்றையும் |

இருகுறில் அல்லது நெடிலுடன் 'று' வில் முடியும் சொற்களில் நடுவில் மெய் இரட்டித்து விகுதி சேரும்

# நற்றமிழ் பழகு




அலை 81




| | |
|---|---|
| கூட்டனி | கூட்டணி |
| கட்சத்தீவு | கச்சத்தீவு |
| சுயேட்சை | சுயேச்சை |
| வாக்குருதி | வாக்குறுதி |
| வாக்களிப்பிர் | வாக்களிப்பீர் |
| தேர்தல் ஆனையம் | தேர்தல் ஆணையம் |

தேர்தல் காலத்தில் ஏற்படுகிற பிழைகள்

# நற்றமிழ் பழகு




அலை 82





| | |
|---|---|
| அரசானை | அரசாணை |
| குறிப்பானை | குறிப்பாணை |
| தீர்ப்பானை | தீர்ப்பாணை |
| ஆனையர் | ஆணையர் |
| தேர்வானையம் | தேர்வாணையம் |
| நீதிப்பேரானை | நீதிப்பேராணை |

ஆணை என்றால் உத்தரவு
ஆனை என்றால் யானை

# நற்றமிழ் பழகு




அலை 83





| | |
|---|---|
| அணைவரும் | அனைவரும் |
| தீயனைப்பு | தீயணைப்பு |
| கட்டியனைத்து | கட்டியணைத்து |
| அரவனைப்பு | அரவணைப்பு |
| தலையனை | தலையணை |
| அனைத்துக்கொள்வது | அணைத்துக்கொள்வது |

அனைத்து = எல்லாம்

அணைத்து = தழுவல்/தடை

# நற்றமிழ் பழகு






அலை 84





| | |
|---|---|
| குழந்தைபேரு | குழந்தைப்பேறு |
| மகபேரு | மகப்பேறு |
| பிள்ளைபேறு | பிள்ளைப்பேறு |
| பெரும்பேர் | பெரும்பேறு |
| நற்பேரு | நற்பேறு |
| அப்பேற்பட்ட | அப்பேர்ப்பட்ட |

**பேறு = வாய்ப்பு**

**பேர் = நபர்**

(பேரு என்பது பேச்சுவழக்கு)

# நற்றமிழ் பழகு






அலை 85





| | |
|---|---|
| வகைத்தொகை | வகைதொகை |
| வகைப்பிரிக்க | வகைபிரிக்க |
| வகைபாடு | வகைப்பாடு |
| வகைபடுத்தும் | வகைப்படுத்தும் |
| வகைபட்டியல் | வகைப்பட்டியல் |

உம்/ஐ மறைந்தால் அது தொகை. ஒற்று வராது.
இதர இடங்களில் ஒற்று வரும்

# நற்றமிழ் பழகு






அலை 86





| | |
|---|---|
| உயர்க்கல்வி | உயர்கல்வி |
| உயர்த்தர | உயர்தர |
| உயர்ப்பதவி | உயர்பதவி |
| உயர்த்திரு | உயர்திரு |
| உயர்த்தொழில் | உயர்தொழில் |
| உயர்ப்படிப்பு | உயர்படிப்பு |

உயர் என்ற வினைத்தொகைக்குப் பின் ஒற்று வராது

# நற்றமிழ் பழகு






அலை 87





| | |
|---|---|
| செங்கலால் | செங்கல்லால் |
| நாமக்கலில் | நாமக்கல்லில் |
| திண்டுக்கலுக்கு | திண்டுக்கல்லுக்கு |
| தடைக்கலாக | தடைக்கல்லாக |
| மைல்கலாக | மைல்கல்லாக |

கல் என்று வரும் சொற்களில்
ல் இரட்டித்து வரும்

# நற்றமிழ் பழகு






அலை 88





| | |
|---|---|
| முடித்திருத்தகம் | முடிதிருத்தகம் |
| முடிச்சூட்டுவிழா | முடிசூட்டுவிழா |
| முடிக்கொட்டுதல் | முடிகொட்டுதல் |
| முடிகாணிக்கை | முடிக்காணிக்கை |
| முடிகயிறு | முடிக்கயிறு |

‘முடி’க்குப் பின்
வினையடி என்றால் ஒற்று வராது.
பெயர்ச்சொல் என்றால் ஒற்று வரும்.

# நற்றமிழ் பழகு






அலை 89





| | |
|---|---|
| முடியாதபடி கூறு | முடியாதபடிக் கூறு |
| சட்டப்படி குற்றம் | சட்டப்படிக் குற்றம் |
| அதன்படி செய்ய | அதன்படிச் செய்ய |
| தரும்படி கேட்டேன் | தரும்படிக் கேட்டேன் |
| ஆசைப்படி கல்யாணம் | ஆசைப்படிக் கல்யாணம் |
| மறுபடி பார்த்தால் | மறுபடிப் பார்த்தால் |

படி என்ற துணைவினைக்குப் பின்
ஒற்று மிகும்

# நற்றமிழ் பழகு






அலை 90





| | |
|---|---|
| அதேப்போல | அதேபோல |
| இதேப்போல் | இதேபோல் |
| இத்தகையச் சூழல் | இத்தகைய சூழல் |
| அத்தகையத் திட்டம் | அத்தகைய திட்டம் |
| எத்தகையக் கொள்கை | எத்தகைய கொள்கை |

இத்தகைய சுட்டுச் சொற்களில் ஒற்று மிகாது

# நற்றமிழ் பழகு








அலை 91




| | |
|---|---|
| கோழிகறி | கோழிக்கறி |
| நாய்கடி | நாய்க்கடி |
| குருவிகூடு | குருவிக்கூடு |
| கழுதைபால் | கழுதைப்பால் |
| புலிகுட்டி | புலிக்குட்டி |
| ஆட்டுபுழுக்கை | ஆட்டுப்புழுக்கை |

விலங்குகளின் பெயருக்குப் பின் தொடர்புடைய பெயர்ச்சொல் வந்தால் ஒற்று வரும்

# நற்றமிழ் பழகு






அலை 92





| | |
|---|---|
| எண்ணற்றப் பணி | எண்ணற்ற பணி |
| தரமற்றப் பொருள் | தரமற்ற பொருள் |
| அர்த்தமற்றக் கேள்வி | அர்த்தமற்ற கேள்வி |
| பயனற்று போனது | பயனற்றுப் போனது |
| உணர்வற்று போனார் | உணர்வற்றுப் போனார் |
| பொறுப்பற்று கிடந்தார் | பொறுப்பற்றுக் கிடந்தார் |

அற்ற என்ற சொல்லுக்குப் பின் ஒற்று வராது
அற்று என்ற சொல்லுக்குப் பின் ஒற்று வரும்

# நற்றமிழ் பழகு








அலை 93




| | |
|---|---|
| மாதாந்தர | மாதாந்திர |
| சிதலமடைந்து | சிதிலமடைந்து |
| சித்தரவதை | சித்திரவதை |
| சுத்தகரிப்பு | சுத்திகரிப்பு |
| பாதரியார் | பாதிரியார் |
| பத்தரமாக | பத்திரமாக |

தி -> த ஆகப் பிழைவிடும் இடங்கள்